# தங்கக் குழந்தைகள்

தம்பி ஸ்ரீநிவாசன்







'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'

அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக

மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு

அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**




## ஒரு மணி நேர நாடகம்

(மத்திய அரசினர் பரிசு பெற்றது)

தம்பி ஸ்ரீநிவாசன்

விற்பனை உரிமை :

**பாரி நிலையம்**

59, பிராட்வே சென்னை 1.

அன்புள்ள தம்பி தங்கைகளுக்கு,

அன்பு ஆசிகள்.

"தங்கக் குழந்தைகள்" நாடகம் முதன் முதல் 1955-ம் ஆண்டு குழந்தை எழுத்தாளர் சங்கத்தார் நடத்திய குழந்தைகள் நாடக விழாவில் நடிக்கப்பட்டது. 1957-ம் ஆண்டு குழந்தைகள் தினத்தில் முதலில் புத்தகமாக வெளி வந்தது. 1959-ம் ஆண்டு குழந்தைகள் தினத்தில் மத்திய அரசினரின் குழந்தை இலக்கியப் பரிசைப் பெற்றுள்ளது.

இந்த ஒரு மணி நேர நாடகம், பல பள்ளிக்கூடங்களிலும் குழந்தைச் சங்கங்களிலும், பிற இடங்களிலும் ஆண்டு விழா போன்ற நிகழ்ச்சிகளில் நடிக்கப்பட்டு வருகிறது. குழந்தைகள், பெற்றோர்கள், ஆசிரியர்கள் ஆகிய எல்லாரும் இதை விரும்பிப் பாராட்டி வருகின்றனர்.

இந்த நாடகத்தைப் படித்தும், நடித்தும், பார்த்தும் மகிழ்ந்த பல குழந்தைகளைப் போல் நீங்களும் மகிழ்ந்து பயனடைய, இப்போது இந்நூல் இரண்டாவது பதிப்பாக வெளிவருகிறது.

நாடகத்தை நடத்த விரும்புவோர் குழந்தைப் புத்தக நிலையத்தாருக்குக் கடிதம் எழுதி முன்னதாகவே தெரிவிப்பது நலம்.

சென்னை,
மே, 1960.

அன்புள்ள,
குழந்தைப் புத்தக நிலையத்தார்

# நாடக பாத்திரங்கள்



மணி

மணியின் அம்மா

மணியின் அப்பா

மணியின் தங்கை கீதா

மணியின் அக்கா ராஜம்

மணியின் அண்ணு கிட்டு

மணியின் நண்பன் பாலு

மணியின் நண்பன் சோமு

ராஜத்தின் தோழி மல்லிகா

துணிக் கடைக்காரர்

மளிகைக் கடைக் குமாஸ்தா

தலைமை ஆசிரியர்

உலகப்பர்

லைப்ராரியன்



**காட்சி—1** இடம்—வீட்டின் உட்புறம்

*[அம்மா துணிகளை மடித்து வைக்கிறாள். ஐந்து வயதுள்ள குழந்தை கீதா அம்மாவின் அருகே சென்று கேட்கிறாள்.]*

**கீதா :** அம்மா, அப்பா எப்போ வருவா, அம்மா?

**அம்மா :** இப்போ வந்துவிடுவார், கீதா. நீ போய் சமத்தா விளையாடு. அப்பா வந்ததும் கூப்பிடறேன்.

**கீதா :** அம்மா, அப்பா வர்ரபோது சாக்லேட் பொட்டலம் வாங்கிண்டு வருவார். இல்லியாம்மா?

**அம்மா :** கட்டாயம் வாங்கிண்டு வருவார் கண்ணே! (முணுமுணுத்தபடி) நாம இருக்கிற நிலைமைக்கு உங்கப்பா தினம் சாக்லேட் பொட்டலம்தான் வாங்கி வருவார்!

**கீதா :** (கொஞ்ச தூரம் போய்விட்டுத் திரும்பி வருகிறாள்) அம்மா, இன்னிக்குத்தானே ஒண்

ணுங்தேதி ? இன்னிக்குக் கட்டாயம் வாங்கிண்டு வரதா அப்பா சொல்லியிருக்கார்... அம்மா, அம்மா, அப்பா சாக்லேட் வாங்கிண்டு வந்ததும் உனக்குக்கூட ஒண்ணு தாரேன் அம்மா !

**அம்மா :** அடி என் சமர்த்து.(குழந்தையை அணைத்துக் கொள்கிருள்) அது சரி, இன்னிக்கு ஒண்ணுங் தேதியா? உனக்கு எப்படித் தெரியும் ? யார் சொன்ளு ?

**கீதா :** அப்பாதான் சொன்ஞர். அப்பாதான் தினம் தினம், 'ஒண்ணுங்தேதி வரட்டும்' 'ஒண்ணுங் தேதி வரட்டும்'னு சொன்ஞரே. நானும் தினம் தினம் அவரை 'என்னிக்கப்பா ஒண்ணுங் தேதி வரும்'னு கேட்டேன். இன்னிக்குத்தான் ஒண்ணுங் தேதின்னு அப்பா சொன்ஞர். ஏம்மா இன்னிக்குத்தானே ?

**அம்மா :** ஆமாம் கண்ணு. இன்னிக்குத்தான் முதல் தேதி. இன்னிலேந்து புது மாசம் பிறந்திருக்கு . . .

(மணி வேகமாக உள்ளே வருகிருன்)

**மணி :** ஆமாம் இன்னிக்கு முதல் தேதி. புது மாசம் பிறந்து விட்டது. ஆளு, என்ன பிரயோஜனம் ?

**அம்மா :** என்னடா ? வரும்போதே படபடான்னு பொறிஞ்சு தள்றே ?

**மணி :** என்னம்மா இது ! நீயே பாரேன். இன்னிக்கு என் கிளாசிலே என்ன நடந்தது தெரியுமா ?

**அம்மா :** என்ன நடந்தது சொல்லேன்.

**மணி :** போன மாசம் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டாதவா பேர் எல்லாம் படிச்சா; அதிலே என் வகுப்பிலே என் பேர் மட்டும்தான் இருந்தது. நான் மட்டும் எழுந்து நின்றேன். எல்லாரும் என்னையே பார்த்தா. ஒரே அவமானமா இருந்தது.

**அம்மா :** என்னடா மணி. பொறுத்துக்கொள்ளேன். இன்னிக்கு அப்பா சம்பளம் வாங்கிண்டு வந்துடுவார். உடனே, உன்னுடைய பள்ளிக்கூடச் சம்பளத்தைக் கட்டிடலாம்.

**மணி :** போன மாசச் சம்பளம் மட்டும் கட்டினு போதாது. இந்தப் புது மாசச் சம்பளமும் கட்டணும். இல்லாட்டா இந்த மாசமும் அபராதத்தோடே சம்பளம் கட்டும்படி ஆய்டும். எனக்கு ரொம்ப அவமானமா இருக்கு அம்மா.

**அம்மா :** என்ன மணி, நீயே இப்படிச் சொல்லறே! நீ விஷயம் தெரிஞ்சவன்; புத்திசாலி! இல்லையா? உங்கப்பா எவ்வளவோ கஷ்டப்பட்டுச் சம்பாதிச்சு உன்னை ஏழாவதுவரை படிக்க வச்சிருக்கார். நீ இவ்வளவு தூரம் படிப்பதே பெரிசு. சரி, வா; பலகாரம் சாப்பிடலாம். (உள்ளே போகிறார்கள்.)





காட்சி—2 இடம்—வீட்டுக் கூடம்.

[மணி கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறான். தங்கை கீதா அருகே வருகிறாள். கணக்குப் போடுவதை உற்றுப் பார்க்கிறாள்.]

**மணி :** இதோ பார் கீதா, இப்போ நான் ஒன்பது கணக்குப் போடணும். நீ கிட்டே வந்து தொந்தரவு செய்தால் உனக்கு ஒன்பது குட்டுக் கிடைக்கும்.

**கீதா :** வெவ்வெவ்வெவ்வே. அம்மா, அம்மா. மணியைப் பார் அம்மா. என்னைக் குட்டுறான்.

**அம்மா :** (உள்ளிருந்தபடியே) டேய் மணி, குழந்தையைக் குட்டாதேடா.

**மணி :** (உரத்த குரலில்) நான் ஒன்றும் குட்டலை அம்மா.

(கீதாவிடம்) நீ இது மாதிரி கோள் சொன்னா, நிஜமாவே உன்னைக் குட்டுவேன். (கையை ஓங்குகிறான்.)

(கீதா நழுவிப் போய்விடுகிறாள்.)

(அரைக் கால் சட்டையும் பனியனுமாய் கையில் டென்னிஸ்மட்டையைச் சுழற்றியபடி கிட்டு வருகிருன்.)

**கிட்டு :** ஜாலியாக நாங்கள்—மிக
ஜாலியாக நாங்கள்
ஜா லி யா க, ஜாலியாக... ஜா...லீ...

**மணி :** நிறுத்தண்ணு உன் கோமாளிக் கூத்தை. வீடு பற்றி எரியுது. நீ பாட வந்துட்டே !

**கிட்டு :** ஐயையோ! எங்கேடா, எங்கேடா நெருப்பு?

**மணி :** அடுப்பிலே !... ..உனக்கு இப்போ என்ன ஜாலி வந்துட்டுது ?

**கிட்டு :** ஏன் ? நான் எப்பவுமே ஜாலிதான்; நான் சின்னவனு இருந்தப்போ என்னை அப்பா எப்படிக் கூப்பிடுவார் தெரியுமா ? ஜாலி, ஜாலி என்று செல்லமாக் கூப்பிடுவாராம்.

**மணி :** ஆமா. அப்போ அப்பா ஜா—லி யா இருந் தார். ஆனு, இப்போ......

**கிட்டு :** என்னடா மணி உளர்ரே. இன்னிக்குத் தேதி ஒண்ணு. அப்பா சம்பளம் வாங்கி யிருப்பார். இன்னிக்கு அப்பா வந்ததும் நான் விடப் போறதில்லே. நானும் நாலு மாசமாக் கேக்கறேன், ஒரு டென்னிஸ் மட்டை வேணும்னு. இந்தப் பழைய மட்டையை எத் தனை நாள் வைத்திருப்பது ? இன்னிக்கு எப் படியும் ஒரு பத்து ரூபா வாங்கிடணும்.

**மணி :** டென்னிஸ் மட்டைக்குப் பத்து ரூபாயா!... சரி சரி, உனக்குப் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டியாச்சா ?

**கிட்டு :** இல்லை.

**மணி :** அப்போ, அதற்குப் பணம் கேட்க வேண்டாம் ?

**கிட்டு :** அட போ. அது அப்பாவின் பொறுப்பு. அதை அவரே கட்டிவிடப் போகிறார். டென்னிஸ் மட்டைதான் இப்போ எனக்கு முக்கியம்.

**மணி :** உன் டென்னிஸ் மட்டையைவிட நான் கேட்கப் போறதுதான் ரொம்ப முக்கியம்.

**கிட்டு :** (உரத்த குரலில்) இல்லை. என் விஷயம் தான் முக்கியம்.

**மணி :** இல்லை, இல்லை. என் விஷயம்தான் முக்கியம்.

**கிட்டு :** இல்லவே இல்லை. என் விஷயம்தான் முக்கியம்.

**மணி :** அதெல்லாம் இல்லை. என் விஷயம்தான் முக்கியம்.

(கூச்சலைக் கேட்டு அம்மா வருகிறாள்.)

**அம்மா :** என்னடா இது கூச்சல்? நிறுத்துங்கள். இப்போ என்ன குடி முழுகி விட்டது ?

**மணி :** அம்மா, எனக்கு விஞ்ஞானப் புத்தகம் உடனே வாங்க வேணுமா? கிட்டுவுக்கு டென்னிஸ் மட்டை உடனே வாங்க வேணுமா? நீயே சொல்லம்மா.

**அம்மா :** விஞ்ஞானமு மாச்சு. அஞ்ஞானமு மாச்சு. இருக்கிற புத்தகத்தை முதலிலே படி.

**கிட்டு :** அப்படிச் சொல் அம்மா.

**மணி :** நீ சும்மா இரு அண்ணா...அம்மா, அந்தப் புத்தகம் இல்லாமே போனா என்னை வாத்தி யார் கிளாசிலே நிற்க வைக்கிறார் அம்மா.

**அம்மா :** ஏண்டா, உன் வாத்தியார் என்ன சிங்மகா, புலியா ? அவரும் நம்மைப் போல ஒரு குடும்பஸ்தர்தானே ! அவருக்குப் பிள்ளை குட்டியே கிடையாதா ?

**கிட்டு :** நல்லாச் சொன்னே அம்மா. மணியின் வாத்தியாருக்கா பிள்ளைகுட்டி இல்லே? இன்னம் ஒண்ணு பிறந்தா, சரியா ஒரு டஜன் !

**மணி :** அண்ணு, என் வாத்தியாரை அவமரியாதையாப் பேசாதே.

**கிட்டு :** என்னடா சொல்லிட்டேன் நான் ?

**அம்மா :** பார்த்தாயா, பார்த்தாயா, மறுபடியும் சண்டை ! எனக்குத் தலைக்கு மேலே வேலை இருக்கு. பொதுவா அண்ணன் தம்பின்னுலே சண்டைதான் போடுவா போலிருக்கு. நீங்க அண்ணன் தம்பி போல சண்டை போட வேண்டாம்; நண்பர்களைப் போல சினேகமா இருங்கோ.

(உள்ளே போகிருள்.)

**மணி :** (மெதுவாய்) நல்ல அண்ணு இது ! ஜாலியாம் ஜாலி !

**கிட்டு :** என்ன சொல்றே ?

**மணி :** ஒண்ணுமில்லே. ராஜம்கூட வந்துட்டான்னு சொன்னேன்.

(ராஜம் வருகிருள்)

**கிட்டு :** ராஜம், இந்தா, இந்தப் பழைய டென்னிஸ் மட்டையைக் கொண்டு போய் அடுப்பிலே

வை. நான் புதுசா ஒண்ணு வாங்கப் போறேன்.

**ராஜம் :** ஏன் அண்ணு, அப்பா வந்துட்டாரா? உனக்குப் பணம் கொடுத்துட்டாரா?

**கிட்டு :** இன்னும் இல்லே. இப்போ வந்துடுவார்.

**மணி :** என்ன ராஜம், நீ கூட அப்பாவின் பணத்தைக் கரைக்கப் போறியா?

**ராஜம் :** அடுத்த வெள்ளிக்கிழமைக்குள்ளே எனக்கு ஒரு நீலச் சட்டையும் நீலப் பாவாடையும் வேண்டியிருக்கு.

**கிட்டு :** எதுக்கு?

**ராஜம் :** எங்க பள்ளிக்கூடத்திலே ஒரு நாட்டியம் ஆடப்போருேம். அதிலே எல்லாரும் ஒரே மாதிரி நீலச் சட்டை, நீலப் பாவாடை போட்டுக் கொள்ளணும்னு வாத்தியாரம்மா சொன்னுங்க.

(இதைக் கேட்டபடி அம்மா உள்ளிருந்து வருகிருள்.)

**அம்மா :** கொஞ்ச நாளேக்கு முன்னே வெள்ளேப் பாவாடை, வெள்ளேச் சட்டை வேணும்னு தைத்துக்கொண்டாயே ராஜம், அது?

**ராஜம் :** அது சமூக அறிவுப் பயிற்சிக்காக. இது நாட்டியத்துக்காக.

**கிட்டு :** நல்ல பள்ளிக்கூடம்! அடுத்த மாசம் பச்சைப் பாவாடை; பச்சைச் சொக்காய்; அதுக்கு அடுத்த மாசம் மஞ்சப் பாவாடை, மஞ்சச் சொக்காய்; அதுக்கு அடுத்த மாசம் சிவப்புப் பாவாடை, சிவப்புச் சொக்காய்—இப்படிப்

பன்னிரண்டு மாசத்துக்கும் பன்னிரண்டு வர்ணத்திலே சட்டை பாவாடை! நல்ல பள்ளிக்கூடம்...ஏண்டா மணி நம்ம பள்ளிக்கூடத்திலே இதுபோல ஒண்ணுமே செல்ற தில்லையே! அப்படிச் சொன்னலும் ஸ்கௌட்டில் வெறும் காக்கிச் சட்டை, காக்கிச் சாராய்தான் போடச் சொல்ரு.

(கதவு தட்டும் ஓசை)

**அம்மா :** டேய் கிட்டு, கதவை யாரோ தட்டரு. போய்ப் பார். அப்பாவா பார்.

(கிட்டு போகிருன்)

**மணி :** ராஜம், அப்பா வந்ததும் ஒண்ணும் கேக்காதே. நான் என் சம்பளத்தை முதலில் வாங்கிடறேன். அப்புறம், உன் பாவாடை, சட்டையைப் பாத்துக்கலாம்.

**ராஜம் :** முடியாது. நான்தான் முதலில் கேட்டேன்.

**மணி :** நான்தான் முதலில் கேட்டேன்.

**ராஜம் :** இல்லே, நான்தான் முதலிலே.

**மணி :** இல்லே, இல்லே. நான்தான் முதலிலே.

**அம்மா :** நிறுத்துங்கோ சண்டையை.

(கிட்டு வருகிருன்)

**கிட்டு :** அப்பா வரவை நாமதான் ஆவலா எதிர்பார்க்கிரேம்னு, துணிக்கடைக்காரர் கூட அவரை வரவேற்க வாசலில் வந்துட்டார்.

**அம்மா :** அவர் பழைய பாக்கிக்காக வந்திருப்பார். அவருக்கு என்ன பதில் சொன்னே ?

**கிட்டு :** 'நீங்க கடைக்குப் போங்கோ. அப்பா இப்போ வந்துடுவார். ராஜத்துக்கு நீலப் பாவாடை சட்டை வாங்க அவரே உங்க கடைக்கு வருவார்'னு சொன்னேன். சரி தானே ராஜம் ?

(மறுபடியும் கதவு தட்டும் ஓசை)

**அப்பாவின் குரல் :** கதவைத் திற, லட்சுமி

**ராஜம் :** அப்பா வந்துட்டாரம்மா.

(கதவைத் திறக்க ஓடுகிருள். **அப்பா** வருகிருர்.)

**கீதா :** (ஓடி வருகிருள். அப்பாவைக் கட்டிக் கொண்டு) அப்பா...ப்பா எனக்கு சாக்லேட் வாங்கிண்டு வந்தயா அப்பா ?

**அப்பா :** வாங்கித்தாரேன் கண்ணு. இந்தா முதலில் இந்த மிட்டாயைச் சாப்பிடு.

(ஒரு பொட்டலம் தருகிருர்)

**ராஜம் :** (ஆவலோடு) அப்பா...

(**அம்மா** உடனே அவள் கையைப் பிடித்து இழுக்கிருள்)

**அம்மா :** அடி ராஜம், இப்போதான் அப்பா களைப் போடே வந்திருக்கார். அவரைத் தொந்தவு செய்யாதே. கிட்டு, மணி, நீங்க கூட போய் உங்க காரியத்தைப் பாருங்கோ. அப்புறம் வரலாம்.

(**கிட்டு, மணி** மெதுவாக நகருகிருர்கள்)

**கீதா :** இந்தா ராஜம். (பொட்டலத்திலிருந்து ஒரு மிட்டாயை ராஜத்துக்குக் கொடுக்கிருள். ராஜம் முணுமுணுத்தபடி உள்ளேபோகிருள்)

**கீதா :** அம்மா, நான்கூட என் காரியத்தைப் பார்க் கப் போறேன் அம்மா.

(உள்ளே போகிருள்)

**அப்பா :** (கோட்டைக் கழற்றி) இந்தா இதை எடுத்து வை......அ...ப்...பா...நல்ல வேலே. நல்ல வேலே. ஆளேக் கொல்றது. ஏதாவது காப்பியோ டீயோ—எந்தத் தண்ணியாவது கொண்டா.

**அம்மா :** இப்படிக் கேட்டா என்ன அர்த்தம்? காலேயிலேயே நான் சொன்னதை மறந்துட் டேளா?

**அப்பா :** என்ன சொன்னே?

**அம்மா :** என்ன சொன்னேனு? வரும்போது காப் பிப்பொடி வாங்கிண்டு வரச் சொன்னேனே!

**அப்பா :** சரி போ. நீ கேட்டா உடனே ஸ்டோர் காரன் கொடுத்துடுவாஞ? (கோபமாக) அங்கே பழைய பாக்கி பைசல் செய்ய வேண் டாமா? ...இப்போ ஏதாவது இருக்கா இல் லேயா சொல்லு.

**அம்மா :** இருக்கு, இருக்கு. கோபிக்க வேண்டாம். இதோ வந்துட்டேன். (உள்ளே போகிருள்)

(அப்பா குறுக்கும் நெடுக்குமாக நடக்கிருர்)

**அம்மா :** (டீயுடன் வருகிருள்) இந்தாங்கோ டீ.

**அப்பா :** முதல் தேதி ஏன் வரது ன்னு இருக்கு!

**அம்மா :** (புன்னகையுடன்) ஆமாம், இருக்கும். இருக்கும். மீதி நாளெல்லாம் முதல்தேதி எப் போது வரும்னு இருக்கும். முதல் தேதி வந்தா அது ஏன் வரதுன்னு இருக்கும். வேடிக்கை!

**அப்பா :** நிஜமாகத்தான் லட்சுமி. சம்பளம் வாங்கினேன். அதிலே பாதிதான் வீட்டுக்குக் கொண்டு வந்தேன். செலவையும் பழைய பாக்கியையும் பார்த்தா மூணு பங்கு சம்பளத் தொகை ஆகிறதே !

**அம்மா :** நாளைக்கு நம்ம கிட்டுவும், மணியும் சம்பாதிக்க ஆரம்பிச்சுட்டா நமக்குக் கவலையே இல்லே.

**அப்பா :** நீ நாளை சமாசாரத்துக்குப் போய்விட்டே. நான் இன்றைய சமாசாரத்தைப் பேசறேன்.

(கிட்டு, மணி, ராஜம் மூவரும்

'நான் தான் முதலில் கேட்பேன் !'
'நான் தான் முதலில் கேட்பேன் !'
'நான் தான் முதலில் கேட்பேன் !'

என்று கூவியபடியே வருகிறார்கள்.)

**ராஜம் :** அப்பா, எனக்கு......

**கிட்டு :** ராஜம் உனக்கென்ன அவசரம்? பேசாமே இரு. அப்பா, எனக்கு...

**மணி :** கிட்டண்ணா, சும்மா இரு. நான் தான் முதலில். எனக்கு...

**அம்மா :** (அதட்டும் குரலில்) டேய் மணி !

**ராஜமும் கிட்டுவும் :** அப்பா, எனக்கு...

**அப்பா :** (இரண்டு காதையும் பொத்திக்கொண்டு) ராம ராம ராம ராமா !





காட்சி-3 இடம்—வீட்டு முகப்பு

*[அப்பாவும் துணிக் கடைக்காரரும் ஓர் ஓரத்தில் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இதைக் கவனியாது, புத்தகம் ஒன்றைப் புரட்டியபடி நடந்துவரும் மணி பேச்சுக் குரல் கேட்டு அப்படியே நிற்கிறான்.]*

**அப்பா :** இந்த மாசம் இந்தப் பத்து ரூபாயை வரவு வச்சுக்கோங்க ஐயா. பாக்கியைச் சீக்கிரமே கொடுத்துடுறேன்.

**து. காரர் :** என்னய்யா, ஒரு ரூபாய், இரண்டு ரூபாய்னு கொடுத்தா கடன் தீரப்போகுது? தரவேண்டியது நூறு ரூபாய். பத்து ரூபாய் கொடுத்தா, மிச்சத்தை எப்போ தர்ரது? உங்க ,வீட்டுக்கு எத்தனே தடவை நடக்கிறது?

**அப்பா :** கோபிக்காதீங்க. பொறுத்துக்கோங்க. இந்தப் பணத்தைப் பிடியுங்கோ.

**து. காரர் :** ஊ ஹூம்! இன்னும் ஒரு பதினைஞ்சு சேர்த்து இருபத்தைஞ்சா கொடும்!

**அப்பா :** என்னங்க இப்படிக் கேக்கறீங்க? கையிலே இருந்தா தர மாட்டேனா! இந்த மாசம் வீட்டிலே செலவு. பிள்ளைக்கு இரண்டு மாசம் சம்பளம் கட்டினேன். புதுப் புத்தகங்கள் வாங்க வேண்டியிருந்தது....

**(மணியின் முகத்தில் வேதனை தெரிகிறது)**

நீங்களும் குடும்பஸ்தர். எங்கள் கஷ்டம் உங்களுக்குத் தெரியாதா ?

**து. காரர் :** யார்தான் ஐயா குடும்பஸ்தர் இல்லே? குடும்பஸ்தர்களுக்கெல்லாம் தருமம் செய்யவா துணிக்கடை இருக்குது? பணம் இருந்தால் வாங்க வேண்டும். இல்லாவிட்டா சும்மா இருக்கணும். சரி, சரி, அந்தப் பத்து ரூபாயைச் சீக்கிரம் எடும். இன்னும் கொஞ்ச நேரம் அது உம்மிடம் இருந்தால், அதையும் செலவழித்து விடுவீர்.

(ரூபாயை வாங்கிக்கொண்டு சற்று நின்று)

அடுத்த மாதமாவது குறைஞ்சது இருபத்தைஞ்சு ரூபாய் தரணும். சாக்குப்போக்குச் சொல்லக்கூடாது. இப்போதே சொல்லிவிட்டேன்.

(போகிறார்)

**(மணி** கண்ணைத் துடைத்துக் கொள்கிறான். **அப்பா** உடனே வெளியே கிளம்பு

வதற்காக மேல் துணியைப் போட்டுக் கொள்கிறார். குடையை எடுக்கிறார். அப்போது மளிகைக் கடைக் குமாஸ்தா வருகிறார்.)

ம. கடை : ஐயா வெளியே கிளம்பறப்பலே இருக்கு !

அப்பா : ஆமாம். அதான் பார்த்தாலே தெரியலையா ?

ம. கடை : இ...ஹி! மாசம் பிறந்து ஒரு வாரம் ஆச்சு.

அப்பா : ஆமாம், ஆச்சு.

ம. கடை : (கொஞ்சம் அதட்டலுடன்) இப்பவே நம்ம கடைப் பாக்கியைத் தந்துடுங்கோ. (சட்டைப் பையிலிருந்து ஒரு கத்தை காகிதத்தை எடுத்து, அதில் தேடி, ஒரு சீட்டை எடுக்கிறார்.) போன மாசம் ரொம்ப ஆகலை—ஐம்பத்தேழு ரூபாய் எழுபத்து நாலு நயா பைசா தான். ஆனா, போன மாசத்துக்கு முன் மாசம் பாக்கி இருபத்தேழே முக்கால் ரூபாய் அப்படியே நிக்குது. எல்லாமா கொடுத்துட்டா வாங்கிண்டு போயிடுவேன்.

அப்பா : நீ சொல்றது சரி அப்பா. ஆனால் என் கிட்டே இப்போ பணம் இல்லை. வேறு செலவெல்லாம் வீட்டிலே இருக்கு. கொஞ்ச நாள் பொறுத்துக்கச் சொல்லு உங்க முதலாளியிடம்.

ம. கடை : இதோ பாருங்க. நம்ப முதலாளி நல்லவரு. அதனாலே சும்மா சும்மா பொறுத்திருக்

காரு. இன்னொருத்தரானு உங்களைச் சும்மா விட மாட்டாங்க. நீங்க இதுமாதிரி சாக்குப் போக்குச் சொல்றது நல்லாயில்லே. பணத்தைக் கொடுத்துடுங்க.

அப்பா : (யோசிக்கிறார். உடனே தன் சட்டையிலிருந்து இருபது ரூபாய் எடுக்கிறார்.) இந்தா, நீ வந்ததுக்கு வெறுங்கையாப் போக வேண்டாம். இதை இப்போ வரவு வச்சுக்கோ.

ம. கடை : (அதை வாங்கி எண்ணுகிறார்) பூ! இருபது ரூபா! ஒங்க கடன் என்ன? இது என்ன? இதை முதலாளிகிட்டே காட்டினா நம்ப மூஞ்சிமேலே அடிப்பாரு. பழைய பாக்கியையாவது தீத்துடுங்க; இன்னும் ஏழே முக்கால் தாங்க.

அப்பா : என்னை ரொம்ப சோதனை பண்ணாதே! ஏழே முக்காலும் இல்லை; ஒண்ணே முக்காலும் இல்லை. என்னை இப்போ வெறுமே விடு. உங்க முதலாளியிடம் நானே வந்து பேசிக்கிறேன்.

ம. கடை : தாராளமா வந்து சொல்லுங்கோ. நான் வர்ரேன்.

(சபையோரைப் பார்த்து)

வாங்கறப்போ நிறைய வாங்கிடறாங்க. பாக்கியைக் கேட்டா, ஐயோ, அப்பா, என்ன கோவம் வருது! என்ன ஆத்திரம் வருது! நம்ப பிழைப்பு இதையும் கேக்கணும், முத

லாளிக்கிட்டேயும் கேக்கணும். உம்; இன்னும் பத்து இடத்துக்கு ஓடணும்.

(அப்பா தன் மேல்துண்டு, குடை இவற்றைத் திரும்ப வைத்துவிடுகிறுர். குறுக்கும் நெடுக்கும் உலவுகிறுர். அந்தச் சமயம் **மணி** மன வருத்தத்துடன் உள்ளே போய் விடுகிறுன்.)





**காட்சி-4** **இடம்—பள்ளிக்கூடம்**

*[பள்ளிக்கூடத்தில் கூட்டம் நடக்கிறது. தலைமை ஆசிரியர், உலகப்பருக்கு மாலை போடுகிறார். குழந்தைகள் கை தட்டுகிறார்கள்)*

**தலைமை ஆசிரியர் :** அன்புள்ள மாணவர்களே! இன்று நமது பள்ளிக்கூடத்திற்கு ஒரு நல்ல நாள். நீங்கள் அனைவரும் இத்தனை காலம் பத்திரிகையில் படித்தும், படத்திலே பார்த்தும் இருக்கிற உலகம் சுற்றும் தமிழர் உலகப்பர் இன்று நம்மிடையே வந்திருக்கிறார். உங்கள் சார்பில் அவரை நான் வரவேற்கிறேன். (கைதட்டல்) அமெரிக்காவிலிருந்து ஜப்பான்வரை பல நாடுகளுக்கும் சென்று நிறைய அனுபவம் பெற்றவர் உலகப்பர். அவர் இப்போது பேசுவார். அவர் பேசுவதற்கு முன்னால் நமது பாடசாலைக் குழந்தைகள் சில ஆடல்பாடல்கள் நிகழ்த்துவார்கள்.

(சில கதம்ப நிகழ்ச்சிகள் நடைபெறு கின்றன.)

**உலகப்பர் :** (பேச எழுகிறார், கை தட்டல்.)
அன்புள்ள தம்பி தங்கைகளே! வணக்கம். உங்களது அருமையான ஆடல் பாடல்களைக் கண்டு மகிழ்ந்தேன். கலைத்திறனைக் கண்டு களிப்புறுகிறேன். மிகவும் சந்தோஷம். நான் பல நாடுகளுக்கும் சென்றிருக்கிறேன் என்று தலைமை ஆசிரியர் கூறினார். ஆமாம். நான் எத்தனையோ நாடுகளுக்குச் சென்று அங் குள்ள குழந்தைகளைப் பார்த்துப் பேசியிருக் கிறேன். நான் தெரிந்துகொண்ட பெரிய உண்மை என்ன தெரியுமா? எந்த தேசத்துக் குழந்தையாயிருந்தாலும், அவர்கள் பேசும் பாஷை எதுவாயிருந்தாலும், உலகம் முழு வதும் குழந்தைகள் ஒரே தன்மையான வர்கள்—குழந்தைகள் என்றால் அன்பு உரு வங்கள் என்பதை நான் எங்கும் கண்டேன்.

நான் பார்த்த குழந்தைகள் பல ரகம். சிறு வயதிலேயே மேதையாயிருக்கும் குழந் தைகளைப் பார்த்திருக்கிறேன். மக்குக் குழந் தைகளையும் பார்த்திருக்கிறேன். பள்ளிக் கூடத்தில் படித்தபடியே சம்பாதிக்கும் குழந்தைகளையும் பார்த்திருக்கிறேன்.

இந்த ஒரு விஷயத்தைப் பற்றி நான் உங்களுக்கு விவரமாகக் கூற ஆசைப்படு கிறேன். அமெரிக்கா போன்ற செல்வம் மிகுந்த நாடுகளில்கூட, படிக்கும் சிறுவர்

சிறுமியர் வேலை செய்வதை இழிவாகக் கருத வில்லை. காலையிலும் மாலையிலும் பத்திரிகை விற்கிறார்கள். அவ்வாறு கிடைக்கும் பணத் தைக் கொண்டு பெற்றோர்களுக்குப் பாரமாக இராமல், அவர்களே தங்களது பள்ளிச் சம்பளத்தைக் கட்டுகிறார்கள். அமெரிக்கா விற்குப் போவானேன்? நமது நாட்டிலே, காசியிலே, ஒரு மாணவன் இரவில் ரிக்ஷா இழுத்துச் சம்பாதித்திருக்கிறான். அது தன் னம்பிக்கைக்கு ஒரு அறிகுறி.

புகழ்பெற்ற விஞ்ஞானி எடிசன் இள மையில் பத்திரிகை விற்பவராய்த்தான் இருந் தார். அதனால் அவருக்கு மதிப்புக் குறைந்து விட்டதா?

நமது நாட்டிலும் அம்மாதிரி தன்னம் பிக்கை நிறைந்த மாணவர்கள் தோன்ற வேண்டுமென்பது என் ஆசை. வருங்காலத் தில் நீங்கள் புகழ்பெற்று, பயனுள்ள வாழ்வு வாழ வேண்டுமென்பதே என் ஆசை.

உங்கள் எல்லோருக்கும் என் அன்பு வாழ்த்துக்கள்!

(மாணவர்கள் கை தட்டல்)





காட்சி - 5 இடம் - புத்தகசாலை

*[நூல் நிலையத்தைக் கவனித்துக் கொள்பவர் (லைப்ரரியன்) உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருக்கிறார். **மணியும், சோமுவும்** பேசிக்கொண்டு அங்கு வருகிறார்கள்.]*

**சோமு :** எவ்வளவு அழகாகப் பேசினார் அந்த உலகப்பர் ?

**மணி :** (யோசனையில் ஆழ்ந்தபடி) உம்...

**சோமு :** என்ன யோசிக்கிறாய்? அவர் மாதிரி இருக்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறதா உனக்கு?

**மணி :** (யோசித்தபடியே) இல்லை.

**சோமு :** அவர்போல உலகம் முழுதும் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று உனக்கு ஆசையா ?

**மணி :** இல்லை.

**சோமு :** ஓகோ, தெரிகிறது. உனக்கு அவரைப் போல ஒரு சிறந்த பேச்சாளராக வேண்டுமென்று ஆசை. அதுதானே ?

**மணி :** இல்லே, அதுமாதிரி ஆசை ஒன்றும் எனக்குக் கிடையாது.

**சோமு :** பின்னே ஏன் அவர் பேச்சைக் கேட்டதிலிருந்து ஒரே யோசனையில் மூழ்கிட்டே?

**மணி :** உண்மையைச் சொல்கிறேன் கேள். எனக்கு உலகப்பரைப் போல உலகம் சுற்றவும் ஆசையில்லே; உயர்ந்த பேச்சாளராகவும் ஆசையில்லே. அவர் பேசினுரே அந்தமாதிரி நடந்துகொள்ள ஆசையாயிருக்கிறது.

**சோமு :** எந்தமாதிரி நடந்துகொள்ளப் போகிருய்? (சிரித்துக்கொண்டே) பத்திரிகை விற்கப் போகிருயா, அல்லது 'ரிக்சா' 'இஸ்க'ப் போகிருயா?

**மணி :** உன் கிண்டலுக்குப் பதில் சொல்ல எனக்கு நேரமில்லே.

(லேப்ரரியனிடம் போகிருன்)

ஸார்,

**லேப்ரரியன் :** (தலே நிமிர்ந்து) யாரப்பா அது? இது லேப்ரரியாச்சே. இங்கேயெல்லாம் நீங்கள் வர மாட்டீர்களே! தவறிப்போய் வந்துவிட்டீர்களா என்ன?

**மணி :** இல்லே சார். எனக்கு 'எடிசன் வாழ்க்கை வரலாறு' புத்தகம் வேண்டும். தருகிறீர்களா?

**லேப்ரரியன் :** இருக்கிறதா பார்க்கிறேன்...இல்லாமல் எங்கே போய்விடப் போகிறது?
(அலமாரியிலிருந்து புத்தகத்தைக் கையில் எடுத்து) இதோ நீ கேட்ட புத்தகம்.

(மேலுள்ள தூசியைத் தட்டியபடி)

புத்தம் புதிதாக இருக்கிறது. இதையெல்லாம் யார் படிக்கிறார்கள்? லைப்ரரிக்குப் பிள்ளைகள் எங்கே வருகிறார்கள்? மாயக் கதை, மர்மக் கதை, கொலைக்கதை, கொள்ளைக் கதை இப்படித்தான் கேட்கிறார்கள். உபயோகமான புத்தகமெல்லாம் அப்படியே புத்தப் புதுசாய் இருக்கிறது; கரையான்தான் அதுகளை விரும்புது.

(புத்தகத்தை மணியிடம் நீட்டுகிறார்.)

**மணி :** ரொம்ப நன்றி. நான் வருகிறேன், சார்!

**லைப்ரரியன் :** இரு ஒரு நிமிஷம். எழுதிக்கொண்டு தருகிறேன்.





காட்சி - 6 இடம் - பாலுவின் வீட்டுவாசல்

(பாலு தூங்கி எழுந்து சோம்பல் முறித்துக் கொண்டே வருகிறுன். "ஸார், பேப்பர்! பேப்பர்!" என்ற குரல் கேட்கிறது]

**பாலு :** யாரது புதுப்பையன்! தினம் போடும் பையன் எங்கே?

(மணி பேப்பருடன் வருவதைக் கண்டு, திகைப்புடன்)

அட, நீயா மணி! இது என்ன! நீ ஏன் பேப்பர் போடுகிருய்? எனக்கு ஒன்றுமே புரியலேயே!

**மணி :** (புன்னகையுடன்) ஏன்? நான்தான் புதுப் பேப்பர் பையன். நான் நன்ருகப் பேப்பர் விற்க மாட்டேனு, என்ன?...வழக்கமாக இங்கு வரும் பையன் இப்போது அடுத்த தெருவுக்குப் போயிருக்கிருன்.

**பாலு :** விளையாடாதே! நிஜம்மா நீ தானு இனி தினம் பேப்பர் போடப் போகிருய்?

**மணி :** இதில் விளையாட்டு என்ன? இப்போது தினம் நான் காலையிலும் மாலையிலும் ஒரு மணி நேரம் பத்திரிகை விற்கும் கடையில் வேலை செய்து வருகிறேன். மாதம் பத்து ரூபாய் சம்பளம்!

**பாலு :** அப்போ படிப்பு? நீ படிப்பதற்கு ஏது நேரம்?

**மணி :** படிப்பா! அதுதான் பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்கா வருகிறேனே!

**பாலு :** அது போதுமா? வீட்டிலே படிக்கவேண்டாமா?

**மணி :** பள்ளிக்கூடத்திலே ஐந்தாறு மணி நேரம் படிக்க முடியாத படிப்பை வீட்டிலே ஒரு மணி நேரத்திலே படித்து முடித்துவிடலாம் என்று நினைக்கிருய்? வகுப்பில் கவனமாகப் பாடங்களைக் கற்றுக்கொண்டால், வீட்டிலே அதிக நேரம் படிக்க வேண்டியதில்லை. என்னைப் பார். பள்ளிக்கூடத்தில் பாடங்களைக் கற்கிறேன். வெளியே பொது அறிவு கற்கிறேன்.

**பாலு :** உன் பாடு தேவலை அப்பா. இதோ என்னைப் பார். பள்ளிக்கூடத்தில் கொடுக்கும் தொந்தரவு போதாது என்று, இந்த வாத்தியார்களை வீட்டுக்கும் வரவழைத்துவிடுகிருர் எங்கள் அப்பா. இங்லீஷுக்கு ஒரு வாத்தியார், கணக்குக்கு ஒரு வாத்தியார், விஞ்ஞா

னத்துக்கு ஒரு வாத்தியார்! விளையாட்டுக்குத் தான் வாத்தியார் வைக்கவில்லை எங்கள் அப்பா!

**மணி:** நீ சொல்வதைப் பார்த்தால் அதற்கு நேரமே இருக்காது போலிருக்கிறதே!

**பாலு:** மணி! உன் பின்னாலே யார் வருவது பார்? கணக்கு வாத்தியார் டியூஷனுக்கு வந்து விட்டார் போலிருக்கு. இன்று ஞாயிற்றுக் கிழமை...இன்று கூட அவர் விடமாட்டார் போலிருக்கிறது. நான் வாரேன்.

**மணி:** எனக்கும் நேரமாகிறது...இந்தப் பேப் பரை யெல்லாம் போட்டுவிட்டு வரவேண்டும். பேப்பர், பேப்பர்! ஹிந்து...எக்ஸ்பிரஸ்... தினமணி...தினந்தந்தி...

(கூவிக்கொண்டே போகிறான்.)





காட்சி—7 இடம்-வீட்டின் முன்பக்கம்

*[கையில் ஒரு பேப்பருடன் மணி சில்லறையை எண்ணிக்கொண்டு வருகிறுன்.]*

**மணி :** எழுபது, எழுபத்தைஞ்சு, எண்பத்தைஞ்சு, தொண்ணூறு, ஒரு ரூபாய், ஒரு ரூபாய் பத்து நயா பைசா.

(எதிர்ப்புறம் **ராஜம்** வருகிருள்)

**ராஜம் :** டேய் மணி! கொஞ்ச நாளா எங்கே நீ வீட்டிலேயே இருக்கிறதில்லே? ஊர் சுற்றிக் கொண்டிருக்கிருய்?...கையிலே என்ன? அப்பா பேப்பர் வாங்கிண்டு வரச்சொன்ஞரா? அடேயப்பா! ஏது இவ்வளவு பணம்?

**மணி :** போதுமா, இன்னும் இருக்கா உன் கேள்விகள்? உனக்கு அவசியம் தெரியவேண்டுமாஞல் சொல்லுகிறேன். நான் தினம் காலேயும் மாலேயும் வேலேக்குப் போறேன். சம்பாதிக்கிறேன்!

**ராஜம் :** நிஜமாவா ? எந்த ஆபீசுக்குப் போகிருய் ? ட்ரவுசர், கோட்டு இல்லையே உனக்கு ! புளுகாதே !

**மணி :** அசடே ! கோட்டு சூட்டு இருந்தால்தான் வேலையா ! நான் செய்யும் வேலைக்கு அதெல்லாம் வேண்டாம்.

**ராஜம் :** (ஆச்சரியத்துடன்) என்ன வேலை அது !

**மணி :** பத்திரிகை—பேப்பர்—(கையிலுள்ளதைக் காட்டி) விற்கிறேன் ; சம்பாதிக்கிறேன்.

**ராஜம் :** நீ எதற்காக இப்போது சம்பாதிக்க வேண்டும் ?

**மணி :** அப்படிக் கேள். நான் இனிமேல் கூடிய வரை அப்பாவைத் தொந்தரவு செய்யமாட்டேன். என் பள்ளிக்கூடச் செலவை நானே சம்பாதித்துக் கொள்ளப் போறேன். அப்பாவுக்குத்தான் எவ்வளவு செலவு! எத்தனை பாக்கிக்காரருக்கு அவர் பணம் தரணும்!

**ராஜம் :** அப்பாவுக்கென்ன ? மாசச் சம்பளம் வந்ததும் . அத்தனையும் கொடுத்துடுவார் ! (சிணுங்கிக் கொண்டே) நான் நீலச் சட்டை, நீலப் பாவாடை வேணும்னு போன மாசம் கேட்டேன். இன்னும் வாங்கித் தரல்லே. அதற்குமட்டும் அவரிடம் பணம் இல்லே !

**மணி :** என்ன அசட்டுத்தனமாய்ப் பேசுகிருய் ? போன மாச பாக்கியை யெல்லாம் இந்த மாசம் கொடுத்துட்டா, இந்த மாசத்துச் செலவுக்கு ஏது பணம் ? அதனுல்தான், அவரிடம் எப்போதும் பணம் இருப்பதில்லை. எப்

போதும் கடன்! இந்த நிலைமையை நாம் மாற்ற வேண்டும்.

**ராஜம் :** நாம் மாற்றுவதா? நம்மாலே என்ன செய்ய முடியும்?

**மணி :** ஏன் முடியாது? இதோ என்னைப் பார். நான் பேப்பர் விற்கிறேன். ஏதோ கொஞ்சம் பணம் கிடைக்கிறது. என் பள்ளிக்கூடச் சம்பளம், சட்டைத் துணி வாங்கப் பணம் கிடைக்கிறது. இன்னும் கஷ்டப்பட்டால் மேலும் சம்பாதிக்கலாம்.

**ராஜம் :** உனக்கு யார் இதைச் சொல்லிக் கொடுத்தது?

**மணி :** யாரும் சொல்லிக் கொடுக்கவில்லை. பள்ளிக்கூடத்தில் ஒருவர் பேசினார். அவர் என் யோசனையைக் கிளறினார். சிலர் வாழ்க்கை வரலாறுகளைப் படித்தேன். அப்பா படும் கஷ்டத்தைத் தினம் பார்த்து வருகிறேனே. இதெல்லாம் போதாதா எனக்குச் சொல்லிக் கொடுக்க!

**ராஜம் :** (சற்று யோசித்து) அப்பாவைச் சொல்கிறாயே! அம்மா எவ்வளவு கஷ்டப்படுகிறாள் தெரியுமா, பாவம்! அவளுக்கு ஏதோ உடம்பு சரியில்லை.

**மணி :** அது ஒன்றுமில்லை. குடும்பக் கவலைதான் அவள் வியாதி.

**ராஜம் :** உன்னைப் பார்க்கும்போது நானும் ஓர் ஆண் பிள்ளையாயில்லையே என்று வருத்தமாயிருக்கிறது. அப்படி இருந்தால் நானும்

உன் மாதிரி உபயோகமாய் உழைத்துச் சம் பாதிக்கலாம், இல்லையா ?

**மணி :** இப்போது மட்டுமென்ன ? பெண்ணு யிருந்தால் உழைக்க முடியாதா ? நீயும் எவ் வளவோ செய்யலாமே!

**ராஜம் :** நிஜமாகவா மணி! ... விவரமாச் சொல் லேன் !

**மணி :** முதலில் நீ அம்மாவுக்கு உபகாரமா எத்த னையோ காரியங்கள் செய்யலாம்.

**ராஜம் :** ஆமாம்.

**மணி :** உதாரணமாக, என்னைப்போல் நீயும் வீட் டிலேயே துணி தோய்த்தால் லாண்டரிச் செலவு மிச்சமாகும். செலவை மிச்சப்படுத்தி ஞலே சம்பாதிப்பது போல்தானே !

**ராஜம் :** ஆமாம். அதோடு நானே எல்லாத் துணிக்கும் இஸ்திரி போட்டு விடுவேன்.

**மணி :** நீதான் தையல் கலையில் தேறியிருக் கிருயே ! நம் குடும்பத்திற்கு வேண்டியதை நீயே தைக்கலாமே!

**ராஜம் :** ரொம்ப நல்ல யோசனை மணி ! நம் குடும்பத்துக்கு மட்டுமென்ன ? மற்ற வீடுகளி லும் தேவையான சொக்காய்களைத் தைத்துக் கொடுத்து நானும் சம்பாதிக்கிறேன் பார் !

**மணி :** 'ராஜம் டெய்லரிங் ஹவுஸ்' என்று போர்டு எழுதித் தரட்டுமா ?

(சிரிக்கிருன்)

**ராஜம் :** (சிரித்தபடியே) அது கிடக்கட்டும்; அப் புறம்...

**மணி:** இன்னும் சில யோசனைகளும் வைத்திருக்கிறேன். நான் சொன்னால் நீயும் கிட்டுவும் ஒப்புக் கொள்வீர்களோ, மாட்டீர்களோ என்ற பயத்தாலேதான் இதுவரை சொல்லவில்லை.

**ராஜம்:** ஒஹோ! அதனால்தான் நீ பேப்பர் விற்கும் கதையை யாருக்கும் சொல்லாமல் மூடி வைத்தாயோ? என்னைப் பற்றி நீ கவலைப் பட வேண்டாம். உன் கட்சிதான் நானும்.

**மணி:** அப்படியானால் இன்றைக்கே நமது வீட்டுக் கொல்லையில் தோட்டவேலை ஆரம்பிக்கலாம். அதை உன் பொறுப்பில் விட்டு விடுகிறேன். வீட்டுக்கு வேண்டிய காய் கறியை அதில் பயிரிடலாம்.

**ராஜம்:** கூடவே இரண்டு மூன்று பூச்செடிகளும் வைக்கலாம் மணி...

**மணி:** அது இல்லாமலா?





**காட்சி-8** **இடம்-வீட்டின் உள்ளே**

*[கிட்டு தலை வாரிக் கொண்டிருக்கிறான். அவன் நன்கு உடை உடுத்து வெளியே கிளம்பத் தயாராயிருக்கிறான். மணி நெருங்குகிறான்.]*

**மணி :** அண்ணா, உன்னிடம் ஒரு விஷயத்தை ரொம்ப நாளாகவே சொல்ல வேணும் என்று....

**கிட்டு :** என்னது ? சீக்கிரம் சொல். டெஸ்ட் மாட்ச் பார்க்கப் போகணும்; நேரமாச்சு.

**மணி :** அண்ணா, நீ என்னைவிடப் பெரியவன். உனக்கு நான் புத்தி சொல்ல வருகிறேன் என்று நினைக்காதே. இப்படித் தினமும் 'டெஸ்ட் மாட்ச்' அது இது என்று ஓடிக் கொண்டிருக்கிறாயே, கொஞ்சம் நமது அப்பா அம்மாவுக்கு உதவியாயிருக்கக் கூடாதா ?

**கிட்டு :** அடே ! பெரிய மனுசன் மாதிரி பேச ஆரம்பிச்சுட்டியே ! அப்பா அம்மாவுக்கு உத

வுறதா! எப்படிடாப்பா உதவுறது? அப்பாவுக்குப் பதில் அவர் ஆபீசுக் கட்டுகளைப் படிக்கச் சொல்றியா? அல்லது, அம்மா சமையல் செய்யறபோது குழம்பிலே நிறைய உப்பை அள்ளிப் போடச் சொல்றியா? போடா. போ, போ.

**மணி:** இல்லே அண்ணு, விளையாட்டுப் பேச்சுப் பேச இது நேரமில்லே.

**கிட்டு:** ஆமாம். விளையாட்டுப் பேச்சுப் பேச நேரமில்லே. விளையாட்டுப் பார்க்க நேரமாச்சு. டெஸ்ட் மாட்ச் ஆரம்பமாயிடும்; நான் வரேன்.

**மணி:** நான் சொல்றதை முழுக்கக் கேளண்ணு. நானும் ராஜமும் யோசனை செய்து சில காரியங்களைச் செய்ய ஆரம்பிச்சிருக்கிறோம். நீயும் எங்களோடு சேரேன். நீயும் ஏதாவது சம்பாதிக்கலாமே!

**கிட்டு:** பணம் சம்பாதிக்கிறதுதானே! எனக்குக் கூட சில யோசனைகள் உண்டு அப்பேன்; ஆனால், அப்பாதான் அதுக்கு ஒப்புக்கொண்டு ஒரு எட்டணுத் தரமாட்டேங்கிறார்.

**மணி:** (வெகு ஆவலுடன்) அது என்ன யோசனை? சொல்லேன்.

**கிட்டு:** அதான், அந்த ஒத்தையா ரெட்டையா போட்டியில்லே, அதிலே ஒரு கூப்பன் எடுத்துக்கிறது. அதைப் பூர்த்தி செய்து அனுப்பறது.

**மணி:** (பரிகாசத்துடன்) ஆஹா, ரொம்ப நல்ல யோசனை!

**கிட்டு :** அந்தக் கூப்பனை எப்படி எழுதறது என்று சொல்லலையே நான்? ரொம்ப சுலபம். ஒண்ணுன்னு எழுதணும். இல்லாட்டி ரெண்டுன்னு எழுதணும். அதை எழுத நான் தெருவிலே போய் நிற்பேன். போற வர்ர கார் நம்பரையெல்லாம் பார்ப்பேன். கார் நம்பர் ஒத்தப் படையானு ஒண்ணுன்னு எழுதுவேன். ரெட்டைப்படையானு ரெண்டுன்னு எழுதுவேன். கட்டம் முடியறமட்டும் எழுதி, உடனே தபாலில் போட்டிடுவேன். அப்புறம் லட்ச ரூபாய் பரிசு!

**மணி :** ஓஹோ! அப்படியா! ஆனுல் நான் அந்தக் குருட்டு யோசனையைச் சொல்லவில்லை.

**கிட்டு :** ஓஹோ! இப்போ புரியுது. நீ மலேயன் லாட்டரியைச் சொல்ருய்; இல்லையா? ஒரு டாலர் சீட்டு வாங்கிஞ—அதான் ஒண்ணரை ரூபா கட்டிஞ—லட்சம் டாலர் வருமாமே, அதுதானே? லட்சம் டாலர்ஞ ஒன்றரை லட்சம் ரூபாடா!

**மணி :** எனக்கு அப்படியெல்லாம் குறுக்கு வழியிலே சம்பாதிக்க இஷ்டம் இல்லை. அதில் நம்பிக்கையும் கிடையாது. உடல் வருந்த உழைக்கணும்; சம்பாதிக்கணும்.

**கிட்டு :** எல்லாம் எனக்குத் தெரியும். இன்னும் நாலு வருஷம் போனுல், எப்படியும் சம்பாதிக்கத்தான் போகிறேன். இப்போ இந்த ஜாலியான மாணவ வாழ்க்கையை ஏன் கெடுத்துக் கொள்ளணும்?

(கிட்டு விசில் அடித்தவாறே போகிறான்.
மணி அவன் போவதைப் பார்த்தபடியே நிற்கிறான்
ராஜம் வருகிறாள்.)

**ராஜம் :** என்ன அவனையே பார்க்கிறாய்? அவன் பேசினதெல்லாம் எனக்கும் நல்லாக் கேட்டுது. அவன் கிடக்கிறான். (கையிலுள்ள கூடையைக் காட்டி) இதோ பார், இன்னிக்குப் பறிச்ச அவரை. ஒண்ணரை வீசைக்குமேல் இருக்கும்!

**மணி :** சோமு வீட்டில் நேத்தே கேட்டார்கள். அவங்களுக்கு முக்கால் வீசை கொடுத்துட்டு, சில்லறை வாங்கிண்டுவா. இன்னிக்கு பூ எதுவும் பூக்கலையா?

**ராஜம் :** இதோ! என் தலையில் பார்.
(தலையைத் திருப்பிக் காட்டுகிறாள். ஒரு ரோஜா செருகியிருக்கிறது.)

**மணி :** ராஜம், அந்த ரோஜாவைப் பார்த்ததும் ஞாபகம் வரது. நான் புதுசாப் போட்ட வர்ணப் படம் பார்த்தாயோ? தோட்டத்துச் செடியையும் பூவையும் பார்த்து எழுதியிருக்கிறேன். இதோ கொண்டு வர்ரேன்.

(ஒரு படத்தை எடுத்து வந்து காட்டுகிறான்.)

**ராஜம் :** நீ வரைஞ்ச படமா! அடடா, பேஷ்! ரொம்பப் பிரமாதமாயிருக்கே! மணி, நீ பெரிய ஆர்டிஸ்ட் ஆயிட்டே மணி! இதை 'ரோஜா' பத்திரிகைக்கு அனுப்பி விடேன். அவர்கள்

எடுத்துக் கொண்டால் நல்ல வெகுமதி தரு வார்கள்.

**மணி :** பார்க்கலாம்...அதோ சோமுவின் தங்கை மல்லிகாவே வந்துட்டாளே! அவளிடமே அவரையைக் கொடுத்துவிடு...வா, மல்லிகா.

**ராஜம் :** வா, மல்லிகா. இதோ இந்தப் படத்தைப் பார், மணி வரைஞ்சது!

**மல்லிகா :** அடே, ரொம்ப நல்லாயிருக்கே!... ரொம்ப நல்லா யிருக்கு மணி. உம், வந்த காரியத்தை மறந்துவிட்டேனே! ராஜம், எங்கம்மா இந்தப் பணத்தை உன்னிடம் தரச் சொன்ஞ. எங்க பாப்பாவுக்கு நீ கொடுத்த சட்டையெல்லாம் நல்லாயிருக்குதாம்.

**ராஜம் :** உஹூம், அப்படியா! ரொம்ப சந்தோஷம். இந்த அவரையும் உங்க வீட்டுக்குத் தான். நானே கொண்டு வரட்டுமா, இல் லாட்டா நீயே கொண்டு போறயா?

**மல்லிகா :** நானே எடுத்துப் போறேன். அவரை ரொம்ப நல்லாயிருக்குதே! உங்க வீட்டுத் தோட்டத்துக்கு வந்துட்டா, எனக்கு அதை விட்டுப் போகவே மனசு வரதில்ல. அவ் வளவு நன்ருய் வைத்திருக்கிருய்!

**ராஜம் :** இந்தா, இந்த ரோஜாவைத் தலேயில் வைத்துக்கொள். இதுவும் எங்கள் தோட் டத்துப் பூதான்.

(ஒரு ரோஜாவைத் தருகிருள்.)

**மல்லிகா :** (ரோஜாவை வாங்குவதற்கு முன் தயக்கத்துடன்) வந்து...

**மணி :** பரவாயில்லே. வாங்கிக்கொள், மல்லிகா! அதற்கு ஒன்றும் பணம் வாங்க மாட்டாள் ராஜம். ஏன் ராஜம். அது உன் தோழிக்கு இனும், இல்லேயா ?

**ராஜம் :** போ மணி, பரிகாசம் செய்யாதே......

**மல்லிகா :** (பூவைத் தன் தலேயில் செருகியபடி ராஜம், தினம் தினம் நீ புதுசா வெளுத்த சட்டையையே போட்டுக்கிறயே; நிறையச் சட்டை வச்சிருக்கியா ?

**ராஜம் :** இல்லேயே. மூணு நாலுதானே என்னிடம் இருக்கு !

**மல்லிகா :** அப்போ உங்க லாண்டரியிலே சீக்கிரமே சலவை செய்துடருளு ?

**ராஜம் :** (சிரித்துக்கொண்டே) ஆமாம். என் லாண்டரியில் துணியைப் போட்ட அன்னிக்கே வெளுத்து வந்துடும்.

**மல்லிகா :** அப்படியா ! அது எந்தக் கடை சொல்லு.

**மணி :** நான் சொல்லட்டுமா ? அதற்கு 'ராஜம் லாண்டரி' என்று பெயர். ராஜம் அவள் கையாலேயே தோய்த்து உலர்த்தி, அவளே இஸ்திரிப் பெட்டி போடுவா. அதனுல்தான் எங்கள் துணி இப்படி இருக்குது !

**மல்லிகா :** நிஜமாவா ?

**ராஜம் :** ஆமாம். இதில் என்ன ஆச்சரியம் மல்லிகா ? நீ கூட இதுமாதிரி செய்யலாமே !

**மல்லிகா :** இதையெல்லாம் கேட்க கேட்க, நீங்க செய்வதையெல்லாம் பார்க்கப் பார்க்க, எனக்

கும் உங்க மாதிரி இருக்க வேணும் போலி ருக்கு. எனக்கும் இந்த வேலையெல்லாம் கற்றுக் கொடுப்பீர்களா ?

**மணி :** ராஜம், கவலைப்படாதே ! கிட்டு நம்மோடு சேராவிட்டால் என்ன, இதோ மல்லிகா நமது கோஷ்டியில் சேர்ந்துவிட்டாள். அவளுக்கு மந்திரோபதேசம் செய்.

**ராஜம் :** கிட்டு மட்டும் என்னவாம். ஒரு நாள் நம்மோடு வந்து விடுவான் பாரேன்.





காட்சி-9 இடம்-வீட்டின் கூடம்

*[அப்பா பத்திரிகை படிக்கிறார். கீதாவுக்கு அம்மா தலை பின்னுகிறாள்.]*

**அம்மா :** கொஞ்ச நாளாக இந்த ராஜத்தைக் கவனித்தீர்களா ? என்னை ஒரு வேலை செய்ய விடுவதில்லை. எல்லாம் அவளே கவனித்துக் கொள்கிறாள். ரொம்ப ரொம்ப உதவியாயிருக் கிறாள்.

**அப்பா :** ஆமாம், நானும் பார்த்துக்கொண்டு தான் இருக்கிறேன்.

**கீதா :** நான்கூட ரொம்ப உதவியாத்தானே அம்மா இருக்கேன்.

**அம்மா :** அதற்கென்ன சந்தேகம் ! தலையை ஒழுங்காகப் பின்னிவிட்டிருக்கிறேன். போய் விளையாடு.

(கீதா போகிறாள்)

(கீதா போவதைப் பார்த்தபடியே)

தீபாவளி வரப்போகிறது. குழந்தைகளுக்கு...

**அப்பா :** ஆமாம். அதைப் பத்தித்தான் நானும் யோசித்து வருகிறேன். இந்த வருஷம் துணி எதுவும் வாங்க முடியாது போலிருக்கு. கையில் பணமே இல்லே. அதோடு ஜவுளிக் கடைப் பாக்கி இன்னும் தீர்ந்தபாடில்லே.

**அம்மா :** அப்படி ஒரேடியாச் சொல்லிவிடலாமா? குழந்தைகளுக்கு மட்டும் வாங்கினால் போதும். பட்டிலே இல்லா விட்டாலும், வெறும் நூலிலே யாவது வாங்கவேண்டாமா ?

**அப்பா :** எனக்கு என்ன செய்வதென்றே புரிய வில்லே. ஒரே குழப்பமா யிருக்கிறது...அது சரி, கொஞ்ச நாளா இந்த மணி வீட்டிலே தங்காமல் சுற்றிக் கொண்டிருக்கிறானே ? கிட்டுதான் எப்போதுமே ஊர்சுற்றுபவன். இந்த மணி ஒழுங்காயிருந்தானே, அவனுக்கு என்ன வந்துவிட்டது ?

**அம்மா :** நன்கூட இதைப் பத்திக் கேட்டேன். அவன் சரியாகவே பதில் சொல்லவில்லே. 'நான் ஒண்ணும் தப்பு செய்யல்லே' என்று மட்டும் சொல்றான்.

**ராஜம் :** (ஓடி வருகிறாள்) அம்மா, இங்கே மணி வந்தானா ?

**அப்பா :** மணியா ? அவனைத்தான் நானும் கேட்கிறேன். எங்கே அவன் ?

**ராஜம் :** தீபாவளி வருகிறதே ! புதுசா துணி வாங்கணும்னு சொல்லிக் கொண்டிருந்தான்.

**அப்பா :** புதுத் துணியும் கிடையாது, பழசும் கிடையாது. ஏன், அவனுக்கு இப்போ இருக்கிற துணி போதல்லேயோ?

**ராஜம் :** (சிரிப்பை அடக்கிக் கொண்டு) அவனுக்கு இல்லேயப்பா, உங்களுக்குத்தான்.

**அப்பா :** எனக்கா? புதுத்துணி வாங்க அவன் சிபாரிசு செய்கிருனே? பலே பேஷ்!

**ராஜம் :** அட ராமா! நான் எப்படி விவரமாச் சொல்வேன்? மணி வந்ததும் அவனேயே கேட்டுக் கொள்ளுங்கள். இதோ வாரானே.... அடடா! கிட்டுன்னு!

(கிட்டு வருகிருன்)

**கிட்டு :** யாருக்கப்பா புதுத்துணி வாங்கப் போகிறே? எனக்கு ஒண்ணும் வேண்டாம்! வேண்டியது இருக்கு.

**அம்மா :** பரவாயில்லேயே! நீ கூட சமர்த்தாய்ப் போய் விட்டாயே!

**கிட்டு :** என்க்குப் புதுத்துணி வேண்டாம். ராலே சைக்கிள் வாங்கிக் கொடுத்துடு, போதும்!

**அம்மா**
**அப்பா** } அடேயப்பா!

**அப்பா :** ஏண்டா விளேயாடுறியா? சைக்கிள் வாங்குவது என்பது லேசான காரியமா? உம்!

(இதைக் கேட்டுக்கொண்டே **மணி** வருகிருன். அவன் கையில் மூன்று நாலு பொட்டலம்.)

**மணி :** ஏன், சைக்கிள் வாங்குவது என்ன கஷ்டம்? அண்ணு, கொஞ்ச நாள் பொறுத்துக்கோ. தீபாவளிக்குள் முடியாவிட்டாலும் பொங்கலுக்குள்ளே ஒரு சைக்கிள் வாங்கிடலாம். எனக்குக்கூட அந்த ஆசை இருக்குது.

**அப்பா :** என்னடா சொல்கிருய்? எனக்குப் புரியவில்லையே. ஏது சைக்கிள்? எப்படி வாங்க முடியும்?

**மணி :** அப்பா! நான் ரொம்ப நாளாகவே உங்களுக்கும் அம்மாவுக்கும் தெரியாமல் சில காரியங்கள் செய்து வந்தேன். இனிமேல் சொல்லிவிடலாம். முதலில், இந்தாருங்கள். (இரண்டு ரசீதுகளை அப்பாவிடம் தருகிருன்.

**அப்பா :** (வாங்கிப் பார்த்துவிட்டு) என்ன இது! ஜவுளிக்கடை ரசீது! மளிகைக் கடை ரசீது! அடடே, இரண்டு பேருக்கும் கொடுக்கவேண்டிய பாக்கி அத்தனையும் பைசலாகிவிட்டதா? யார் பணம் கொடுத்தார்கள்?

**மணி :** அதெல்லாம் அப்புறம் சொல்றேன். இதோ இதையும் எடுத்துக் கொள்ளுங்கள்.

(அப்பாவிடம் ஒரு பொட்டலம் தருகிருன்.)

அம்மா! உனக்கும் ஒன்று!

(அம்மாவிடம் ஒரு பொட்டலம் தருகிருன்.)

(இருவரும் பொட்டலங்களைப் பிரிக்கிருர்கள். அப்பாவின் பொட்டலத்தில் ஒரு வேஷ்டி, துண்டு. அம்மாவின் பொட்டலத்தில் ஒரு புடவை, ஒரு ரவிக்கைத் துணி.)

**அப்பா :** இது ஏதடா? எனக்கும் அம்மாவுக்குமா! கடன் பைசல் ஆனதும் மறுபடி கடனுக்கு எடுத்துவந்து விட்டாயா?

**மணி :** இல்லையப்பா, பணம் கொடுத்துத்தான் எடுத்துவந்தேன்.

**அப்பா :**
**அம்மா :** } உனக்கு ஏது பணம்?

**மணி :** அப்பா, செலவுக்குப் பணம் இல்லாமல் நீங்கள் கஷ்டப்படுவதைக் கவனித்தேன். உங்களுக்கு உதவியாக ஏதாவது செய்ய முடியுமா என்று யோசித்தேன். ஏதோ முயற்சி செய்தேன். முயற்சி பயன் அளித்தது பற்றி சந்தோஷப்படுகிறேன்.

**அப்பா :** ஏது? எப்படிச் சம்பாதித்தாய்? விவரமாகச் சொல்!

**ராஜம் :** அப்பா, சில மாதங்களாக மணி தினமும் காலையும் மாலையும் பத்திரிகை விற்றுச் சம்பாதிக்கிறான் அப்பா! அவன்தான் அழகாகப் படம் போடுவானே. பத்திரிகையில் படங்களும் போட்டிருக்கிறான். இந்த வருஷம் 'ரோஜா' பத்திரிகை தீபாவளி மலரில் அவனுடைய வர்ணப் படம் ஒன்று வருகிறது. அதற்கு ஐம்பது ரூபாய் கொடுத்தார்கள்! அதையெல்லாம் கொண்டுதான் கடன் பாக்கியைத் தீர்த்துவிட்டான் மணி.

**அம்மா :** அடேயப்பா! மணி ரொம்பப் பெரிய ஆர்டிஸ்ட் ஆயிட்டானே!

**அப்பா :** இதைக் கேட்கக் கேட்க ஆச்சரியமா யிருக்கே!

**மணி :** ராஜம் மட்டும் லேசுப்பட்டவள் இல்லை யம்மா. வீட்டுத் தோட்டத்தை அவள் எப் படிக் கிளி கொஞ்சும்படி வைத்திருக்கிறாள், பார். அதிலிருந்து வாரத்திற்கு நாலஞ்சு ரூபாய் எடுத்தாளே அவள்! அதோடு தன் தையல் திறமையை யெல்லாம் காட்டி சம்பா தித்ததால்தான் புதுத் துணி வாங்க முடிந்தது அப்பா.

**அப்பா :** நிஜமாகவா ராஜம்?

(வெட்கத்தால் சிரித்தவாறே **ராஜம்** தலை குனிகிறாள்)

என்ன மணி. எனக்கும் அம்மாவுக்கும் புதுசு எதுக்கடா? நீங்கள் குழந்தைகள். உங்களுக் குத் தானே வேண்டும்?

**மணி :** பரவாயில்லை அப்பா. நீங்கள் எப்போதும் தான் எங்களுக்கு வாங்கித் தருகிறீர்கள். இந்த முறை இது எங்கள் பரிசாக—இல்லை, இல்லை—எங்கள் காணிக்கையாக இருக்கட் டுமே!

**அம்மா :** உங்களுக்கு ஒன்றும் வேண்டாமா? அப்பாவை நல்லதாக ஏதாவது வாங்கித் தரச் சொல்றேன்.

**ராஜம் :** எல்லாருக்கும் வாங்கியிருக்கிறோம்.

(**கீதா** வருகிறாள்)

வா கீதா! உனக்கு இந்தச் சட்டை, ரெண்டு ரிப்பன்—தீபாவளிக்கு வச்சுக்கோ.

(சந்தோஷத்தோடு **கீதா** வாங்கிக்கொள்கிறாள்.)

**கீதா :** எனக்கு ரெண்டு ரிப்பன் வேண்டாம்.

ஒண்ணு எனக்கு, ஒண்ணு அம்மாவுக்கு. ஏம்மா! நீ ஒரு ரிப்பன் வச்சுக்கோ. உனக்கு ரிப்பனே இல்லையே!

(கிட்டு வெளியே போக ஓரடி வைக்கிறான். மணி அவனை நெருங்கி)

**மணி :** கொஞ்சம் இரு அண்ணா. (ஒரு புதுப் பொட்டலத்தைப் பிரித்து, டென்னிஸ் மட்டையை எடுக்கிறான்)

இந்தா அண்ணா, நீ வெகுநாளாக ஆசைப் பட்டாயே. டென்னிஸ் மட்டை!

**கிட்டு :** (இத்தனை நேரம் பல உணர்ச்சிகளுடன் பார்த்துக் கொண்டிருந்தவன் பிரமித்துப் போகிறான். மணியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு)

நிஜமாவா! என்ன மணி இது! இது என்ன! எனக்கு நீ பரிசு கொடுக்கிறாயா? வேண்டாம், வேண்டாம்! (கேவுகிறான்)

**கீதா :** அண்ணா, என்ன அண்ணா, ஏன் அழுகிறாய்? யார் அடித்தது சொல் அண்ணா!

**கிட்டு :** சின்னக் குழந்தை கீதாகூட தன் இரண்டு ரிப்பனில் ஒன்றை அம்மாவுக்குக் கொடுக்கிறாள். நான் என்ன செய்கிறேன்? ஒருவருக்கும் உபயோகமில்லாமல் இருக்கிறேன்...... இந்த மட்டை எனக்கு வேண்டாம்.

**மணி :** அப்படிச் சொல்லாதே அண்ணா, நீ நன்றாக டென்னிஸ் ஆடுகிறாய். அதில் வல்லவனாகப் பேரும் புகழும் எடுப்பாய். கவலைப் படாதே!

**கிட்டு :** எனக்கு அதெல்லாம் வேண்டாம். உன்னைப்போல, ராஜத்தைப் போல, இப்போதே

நானும் உதவியாயிருக்க ஆசைப்படுகிறேன். ஏதாவது சொல், செய்கிறேன்.

**மணி :** ஆகட்டும் சொல்கிறேன். முதலில் தீபாவளிப் பண்டிகையை ஜோராய்க் கொண்டாடலாம் அதற்கப்புறம் ஜமாய்க்கலாம்.

**கிட்டு :** மணி, ராஜம். இனிமேல் நானும் உங்களைப் போலவே......

**ராஜம் :** அதற்கென்ன அண்ணு. தீபாவளிப் பண்டிகை முடியட்டும்.

**அப்பா :** (அம்மாவிடம்) நமது குழந்தைகளைப் பற்றி நினைக்க நினைக்க சந்தோஷமாயிருக்கிறது. ரொம்பச் சமர்த்துக் குழந்தைகள்! இல்லையா ?

**அம்மா :** சமர்த்துக் குழந்தைகளா? இல்லை ; தங்கக் குழந்தைகள் !

**அப்பா :** ஆமாம், சந்தேகமே இல்லை ; தங்கக் குழந்தைகள் தான். எல்லா அப்பா அம்மாவுக்கும் இந்தமாதிரிக் குழந்தைகள் கிடைப்பார்களா, என்ன !

(குழந்தைகள் நால்வரையும் அப்பாவும் அம்மாவும் அணைத்துக் கொஞ்சுகிருர்கள்.)

**மங்களம்**





## தம்பி ஸ்ரீநிவாசன்

இவர்தாம் இந்தப் புத்தகத்தின் ஆசிரியர். குழந்தைகளுக்குப் பல ஆண்டுகளாகக் கதைகளும், கட்டுரைகளும், கவிதைகளும் எழுதிவருபவர். குழந்தை இலக்கியம் வளரப் பல வழிகளிலும் பாடுபடுபவர். குழந்தை எழுத்தாளர் சங்கத்தின் செயலாளராக மூன்று ஆண்டுகள் இருந்து பல நல்ல காரியங்களைச் செய்தவர். குழந்தைகளுக்கு நல்ல நாடகங்கள் வேண்டும் என்ற ஆசை இவருக்கு நிறைய உண்டு. அந்த ஆசையில், இவர் எழுதியதுதான் இந்த நாடகம்.

Jacket Printed at Neo Art Press, Madras-2